Regd. No. 2975 ஶ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 296-297

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:—P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.




வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100.

பேருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1973 மே – ஜூன் ீ வெளியீடு

# ஸ்ரீ ராமாநுஜன் 296-297



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும்
வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 25 | ப்ரமாதீச ஸ்ரீ வைகாசிஆனிமீ 1973 மே மீ வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 8, 9 |
| --- | --- | --- |

## வையங்களிடை வைகாசித் திருநாள்

நிகழும் வைகாசி மாதத்தில் இரண்டாந்தேதி (15—5—73ல்) தேவப்பெருமா ளுடைய வைசாக ப்ரஹ்மோத்ஸவம் தொடக்கமாகிறது. ஏழாந்திருநாளன்று நடைபெறவேண்டிய திருத்தேருத்ஸவம் இவ்வாண்டில் திருவீதிகளில் நடைபெறு மல் ரதாரோஹண அவரோஹணங்களோடு நிற்கும். இதற்குக் காரணம் ரதம் செல்லவேண்டிய வீதிகளில் செப்பனிடும் பணி நடந்துவருவதேயாகும். ஆகவே 23—5—73 திருவோண நக்ஷத்திரத்தன்றே அவபிரதம் ஆகும். வருணபகவான் இரங்கவேணுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## ஸ்ரீ ஜகத்குரு காதி ஸ்வாமியின் சதாப்தீ மஹோத்ஸவம்

வைகுண்டவாஸியான ஜகத்குரு ஸ்ரீ காதி ஸ்வாமியின் சதாப்தீ மஹோத்ஸ
வத்தைப் பற்றிச் சென்ற ஸ்ரீராமாநுஜனிதழில் ப்ரசுரம் செய்திருந்ததை நினைவூட்டு
கிறோம். இந்த மஹோத்ஸவத்தின் சார்பாக தினப்படியாய் வித்வத் ஸபை நடக்க
வேணுமென்று திருவுள்ளம்பற்றிய (ஸ்ரீஸ்வாமியின் திருக்குமாரரான) ஸ்ரீமதுபயவே
ஜகத்குரு காதி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ஸந்நிதி வீதியிலுள்ள ஸ்ரீ அண்ணு
ஸந்நிதியில் தினந்தோறும் மாலை 5 மணிமுதலாக வித்வத்ஸபை நடைபெற்று
வரும்படி ஏற்பாடு செய்து 5—5—73 வெள்ளிக்கிழமை முதலாக தினந்தோறும்
வித்வான்களின் உபந்யாஸங்கள் நடைபெற்று வருகின்றன. பேரருளாளன் திரு
வருளால் இது திருமாசி-ஸ்வாதிவரையில் இடையூறின்றி நடைபெற்று வரவேணும்.

# அத்யந்த சோசநீயம்

ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் அனந்தாசார்ய சிரோமணியென்பவர் (64 ப்ராயமுள்ளவர்) திருவல்லிக்கேணியில் ஸ்ரீ பார்த்தஸாரதியின் ப்ரஹ்மோத்ஸவம் ஸேவிக்க அவ்விடமெழுந்தருளி, திருத்தேரினன்று அத்யந்த சோசநீயமான வகையில் திருநாடலங்கரித்தார். இவர் ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ந்யாய சிரோமணி கக்ஷையில் உத்தீர்ணராகி, திருக்கடிகையில் (சோளஸிம்ஹபுரத்தில்) தம் திருத்தகப்பனாரான ப்ர. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ஆரம்பித்து நடத்திவந்த ஸம்ஸ்க்ருத காலேஜை சிலபல வருஷங்கள் நடத்தி வந்தவர். ஸமீபத்தில் சில வருஷங்களாக ஸ்ரீகாஞ்சியில் ஸ்திரவாஸியாயிருந்து தேவப்பெருமாளுக்குத் தொண்டுபூண்டமுதமுண்டு வந்தவர். எம்பெருமான் எது செய்தாலும் அவனைப் பரம காருணிகனென்றே போற்றும் குடியில் பிறந்திருக்கிறோம்.

கூடிநாங்கள்

# தலைநகரில் தனிப்பெருவேள்வி

ஸ்ரீ ஜயதேவகவி கீதகோவிந்த மஹாகாவ்யத்தில் மத்ஸ்யாவதாரத்தை அநுபவிக்கும்போது "ப்ரளயபயோதி ஜலே த்ருதவாநஸி வேதம் விஹித வஹித்ர சரித்ரமகேதம், கேசவத்ருத மீநசரீர! ஜய ஜகதீச ஹரே!" என்று பாடுகிறார். பகவான் மீனுருவெடுத்துக் கடலிற்புக்கு வேதங்களை மீட்டது தன்னை "வேதாநுத்தரதே". என்று மேலும் புகழ்வர். இன்று, பன்னெடுங்காலத்திற்குப் பின்பு, வேதங்கள் ஒடுங்கிக் கிடக்கும்போது அவற்றை உத்தரிப்பிக்கவே போன்று பல அதிமாநுஷ க்ருத்யங்களைச் செய்தருள்பவரான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் ஸமீபத்தில் டில்லியில் நிகழ்த்திய "அகிலபாரத வேத வித்வத் ஸம்மேளனம்" மத்ஸ்யாவதாரவைபவத்தை நினைப்பூட்டிற்று. ஏழெட்டு மாதங்கட்கு முன்பு நிறைவேங்கடப் பொற்குன்றத்தில் ஜீயர் ஸ்வாமி "லக்ஷ்மீ நாராயண ஸஹஸ்ர ஹோமகுண்ட க்ரது" என்னும் பெரியதோர் வேள்வியை நிகழ்த்தியருளினர். பரிதாவி ஆண்டின் இறுதியில் "ஸம்மேளனம்" என்ற பெயரில் நடைபெற்றதும் ஒரு வேள்வியே எனலாம். என்னே? "யஜ தேவபூஜாயாம்" என்பதால் எம்பெருமானை வழிபடுவதே யஜ்ஞம் என்பது பெறப்படும். அவன்றனே அன்னமாய் வெளிப்படுத்த அருமறையினை ஓதுவதிற்காட்டில் அவனுக்கும் வழிபாடு மற்றொன்றும் உளது கொல்! ஆதலின் ஆயிரக்கணக்கில் மறைவலார் குழாங்களாய் வடமொழி வேதத்தையும் தமிழ் மறையினையும் ஓதியதைச் செவிகளாலாரப் பருகிக் கண்டு களித்தோர் இது தனிப்பெரு வேள்வியே என்று இசைவர். 4—4—73 தொடங்கி 12—4—73 வரை நடைபெற்ற இவ்வேள்வியின் வைபவாதிசயத்தை இயன்றவரை இக்கட்டுரையின்கண் எழுதுகின்றேன்.

(3—4—73) செவ்வாய்க்கிழமை இரவு. வெங்கதிரோன் குலவிளக்கு எனப் போற்றப்பட்ட சக்ரவர்த்தி திருமகன் மிதிலைச்செல்வியும் இளையபெருமாளும் திருவடியும் அருகிருப்ப தில்லி மாநகரின் ஏராரும் வீதியார வருகின்றான். அர்ச்சையின் ஸௌலப்யம் திருவடிகள் நிலம்தோய நடந்து வருவதாகவே தோன்றுகின்றது. "நன்னுபாலிம்ப நடசிவச்சிதிவோ?" என்று ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிகள் வினவியது

நம் நினைவுக்கு வருகின்றது. எம்பெருமான் புறப்பாடெனின் யானை முன் செல்ல வேண்டாவோ? எம்பெருமானுக்கு முன்னே நோக்குகின்றோம். "பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய்விண்டிட இராமானுசமுனி வேழம்" எழுந்தருள்வது கண்டு மெய்சிலிர்க்கிறோம். பல்லாண்டிசைப்பார் தமிழ் மறையின் மணம் பரப்ப வேள்வியாய், வேள்வியின் பயனாய் விளங்குமவன் வேள்விச்சாலைக்கு எழுந்தருள்கிறான். (Gajadhar Somani Nagar, Ramlila grounds, New Delhi)

வேள்விச்சாலை விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்டது போற் பொலிகின்றது. இன்னொளி நல்கும் மின்விளக்குகள், (ஹோம குண்டங்களோடு கூடிய) பெருமாள் வீற்றிருக்கும் மண்டபம், வேதபாராயண திவ்யப்ரபந்தாநுஸந்தான மண்டபங்கள் (பந்தல்கள்) மற்றும் ஸ்ரீராமாயண ஸ்ரீபாகவத ராமசரிதமாநஸ பாராயண மண்டபங்கள் இவற்றுடன் கூடிய வேள்விச்சாலை வைதிகோத்தமர்களாலும் பக்தர்களாலும் நிறைந்து விளங்குகின்றது. அங்குரார்ப்பணம் நிகழ்கிறது. இவ்வேள்வியில் அன்வயிக்கத் தமிழகத்தினின்றும் போந்தவர் பலர். கன்னட, ஆந்த்ர, கேரள மாநிலங்களினின்றும் வந்தவர் பலர். உத்தராதிகள் பலர். மறைவலார் குறைவிலாராய் இங்குமங்கு மெங்குமாய் நிறைந்த இந்த ஸந்நிவேசத்தைக் காணப்பெற்ற இநநிலத்தார்க்கிமையவர் நேரொவ்வார் தாமே என்று கூறத் தோன்றுகிறது. இந்தத் தனிப்பெருவேள்வியை நிகழ்த்த தில்லியைத் தேர்ந்தெடுத்ததன் பொருத்தமும் நமக்குப் புலனாகின்றது.

ஆயிரம் ஆண்டுகட்கும் முன்பு இராமாநுசவள்ளலுடைய (துருக்கநாச்சியாரிடமிருந்து செல்வப் பிள்ளையை திருநாராயணபுரத்திற்கு மீண்டும் எழுந்தருளப் பண்ணிச்செல்ல வேண்டி வந்த போது) சரணாரவிந்த ஸ்பர்சத்தால் புனிதமடைந்த பூமி. "க்ருஷ்ணாச்ரயா:" என்று புகழ்பெற்ற பாண்டவர்களுள் மூத்தவராம் தருமபுத்திரர் வேள்வியியற்றிய புண்யபூமி. அருகே மாயன் அன்று ஐவர் தெய்வத் தேரினில் மெய்ம்மைப் பெருவார்த்தையாம் கீதையைச் செப்பிய குருக்ஷேத்ரம். மற்றொரு பக்கம் வருபுனல் காவிரித் தென்னரங்கன் தூயபெருநீர் யமுனைத் துறைவனாய்ப் பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்ப் பண்டு கிரீடை செய்த விருந்தாவனம். இவ்வளவு சிறப்புக்களுடன் பாரதத்தின் தலைநகராய் விளங்கும் ஏற்றம். வேள்விச்சாலையில் இவ்வளவு எண்ணங்களும் நமது நினைவில் தோன்றுகின்றது.

வஸந்த நவராத்திரியின் முதல்தினம். (4—4—73) காலை 7 மணி. பெருமாள் புறப்பாடு கண்டருளப்போகிறார். "வேதபண்டிதர்கள் அனைவரும் விரைவில் வந்து சேரவேண்டும்" என்று பல மொழிகளிலும் அறிவிப்பு ஒலிபெருக்கியின்மூலம் நம் செவியை எட்டுகின்றது. நீராடி, அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு யாவரும் விரைகின்றனர். "வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக செய்ய சுடராழியானடிக்கே சூட்டினேன் சொல்மாலை இடராழி நீங்குகவே என்று." பொய்கைப்பிரான் தன் திருவந்தாதியை அடியார் குழாங்களாய்க் கூடி இசைத்து முன்னே எழுந்தருள "பண்ணினைப் பண்ணுள் நின்றதோர் பான்மையை" எனப்பட்ட பெருமாள் அருளிச் செயலின் சுவையிலே கவரப்பட்டவனாய்ப் பின்செல்வதைக் கண்ணால் பருகும்போது, கண்ணனாய்க் குழலூதுகையில் வானவரும் வானின்ம்

படியரும் பறவையும் கறவையும் மரங்களும் பட்ட பாட்டைத் தாவடைந்தனனே! என்ற சங்கையுண்டாகிறது. கோஷ்டிக்கு முன்பு ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி எழுந்தருள்கிறார். பல வரிசைகளாய் ஸ்ரீ வைஷ்ணவாக்ரேஸரர்கள் பலர் எழுந்தருள்கிறார்கள். அலையாரும் கடல்போல் முழங்கி நான்மறைவாணர் பெருமாளைத் தொடர்ந்து பின்னே வருகின்றனர். வடநாட்டவரும் அங்கு வாழும் தென்னாட்டவரும் பகவத் பாகவதவைபவாதிசயத்தில் ஆழங்காற்படுகின்றனர்.

பெருமாள் யாகசாலையை அடைந்த பின்பு எம்பெருமானைச் சுற்றிலுமுள்ள ஐந்து யாக குண்டங்களில் ஹோமம் நடைபெறுகின்றது. "மல்லைச் செல்வ வட மொழி மறைவாணர் வேள்வியுள் நெய்யழல் வான்புகைபோய்த் திடவிசும்பிலமரர் நாட்டை மறைக்கும் தண்திருப்புலியூர்" என்னும் ஆழ்வார் பாசுரம் நினைவுக்கு வருகிறது. வேள்விச்சாலைக்கு எதிரேயமைந்த திவ்யப்ரபந்த மண்டபத்தில் தமிழ் மறையினைத் தெளிந்த அத்யாபகர்கள் இருநூற்றுவர் பெரியாழ்வார் திருமொழியினை உள்ளமுருக ஸேவிக்கின்றனர். வேதமண்டபத்தில் நான்மறை நின்றதிர்கின்றது. சுக்ல யஜுர் வேதம், க்ருஷ்ணயஜுர் வேதம் போன்ற பல உட்பிரிவுகளிலும் வல்லவர் பலர் அமர்ந்து பாராயணம் செய்கின்றனர். சிறுவர் சிலர் பாராயணம் செய்வதைக் காண்கையில் "பாலகனென்று பரிபவம் செய்யேல்." என்று பந்தலில் ஒலிக்கிறது. "தன்முகத்துச்சுட்டி" யினை ஸேவிக்கும் அத்யாபகர்களின் பாடலின் ஒலியே அது. ஸஹஸ்ரநாமார்ச்சனை நிகழ்கிறது. தேனும் பாலும் அமுதுமாவ திருமால் திருநாமங்களை ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகள் உச்சரிப்பப் பலர் சக்ரவர்த்திதிருமகன் திருவுருவப்படத்தின் முன்னேயமர்ந்து அர்ச்சிக்கின்றனர். பதினொரு மணியளவில் சாற்றுமுறையாகிறது. உடனே வயிற்றுக்குமீயவேண்டியது நினைவுக்குவர ததீயாராதனம் நடக்கும் இடத்திற்குச் செல்கின்றோம்.

* * * * * * *

உண்டமயக்கம் தீரச் சிறிது ஓய்வு பெற கூடாரத்துள் உட்காருகிறோம். வெப்பமிகுதியால் உடனே யாகசாலையின் அருகே வந்து அமர்கிறோம். வெப்பம் நீங்கி அகமகிழ்கிறோம். குளிர்ந்துறைகின்ற கோவிந்தனும் ஸம்ச்ரிதஸிந்து சீதபாநுவாகிற எம்பெருமானும் (அடியார்களாகிற கடலுக்கு சந்திரன் போன்றவன்) அருகிருந்தால் உள்ளமும் உடலும் குளிர்ந்திருப்பதில் வியப்பு யாது?

இரவு 7 மணியளவில் விளக்குளின் ஒளியில் புறப்பாடு நடக்கிறது. புறப்பாடு முடிந்தபின் திவ்யப்ரபந்தபண்டபத்து திருவாய்மொழியை (முதற்பத்து) தொண்டர்க்கமுதென்ன தேவாந்நமாக்கி மஹாகோஷ நல்வேத ஒலிபோலே மஹாத்யயனமென்னப்பாடுகின்றனர். லக்ஷ்மி அஷ்டோத்தரசதநாமத்துடன் பக்தர்களால் அர்ச்சனை நடக்கிறது. சாற்றுமுறையானதும் ததீயாராதனைக்குப் பின்பு தங்கியிருக்கும் கூடாரத்தை நோக்கி நடக்கும் நம் செவிகளில் "ஸ்ரீராம சந்த்ர க்ருபாலு பஜுமன ஹரண பவபயதாருணம் நவகஞ்ஜலோசன கஞ்ஜமுக கரகஞ்ஜபத கஞ்ஜாருணம்" என்ற துளஸீதாஸரின் பாடல் இன்னிசையோடு வந்து பதிகின்றது. கலையரங்கில் "ராம லீலா" (இராமாயண நாடகம்) நடப்பதை உணர்ந்து அதனைச் சிறிது கண்டுகளிக்கிறோம்.

* * * * * * *

இரண்டு தினங்கள் கழிகின்றன. 6—4—73. காலை திவ்யப்ரபந்தகோஷ்டி தனிப்பொலிவுடன் இருப்பதன் காரணம் யாது? எனக் கேட்டுக்கொள்ளும் நாம் கோஷ்டிக்கு நாயகமணிபோன்று காஞ்சியினின்றும் நம் P. B. A. ஸ்வாமி (ககன கமனமாக) எழுந்தருளியிருப்பதை உணர்கிறோம். ஸ்வாமியின் உபந்யாஸங்களைக் காலையிலும் இரவிலும் திவ்யப்ரபந்த கோஷ்டியிலும் பிற்பகல் வித்வத்ஸபையிலும், மற்ற வேத விற்பன்னர்களின் உரைகளையும் கேட்டு சில தினங்களை நற்பொழுதாகக் கழிக்கின்றோம்.

(11—4—73) ஸ்ரீராமநவமியானதால் இன்று கோஷ்டிக்குப்பின் பெருமாள் திருமஞ்சனம் கண்டருள்கிறார். பாலொடு தயிரும் தேனும் தம் சுவை அவன்றன் சுவையிலும் தாழ்ந்தமையின் தோற்றமையால் அடிபணிவதுபோன்று அவன் அடிக் கீழ்ப் புகுகின்றன. தயரதன் பெற்ற மரதகமணித்தடம் நீராடியருள்வது ஸேவிக்க பெருந்திரளாக பக்தர்கள் பந்தலெங்கும் நிறைந்து நிற்கின்றனர். பிற்பகலில் ஸ்ரீராமநவமியையொட்டி "ஸ்ரீராம குணாநுபவம்" நிகழ்கிறது. வடமொழியிற் சிலரும், இந்தியிற் சிலரும் உபந்யஸிக்கின்றனர். இதற்கிடையே வேதப்ரசாரத்தின் பொருட்டு ஜீயர் ஸ்வாமிகள் தமது திட்டமொன்றை அறிவிக்கின்றார். ஹைதராபாத்தில் தாம் ஒரு பீடம் அமைத்திருப்பதாகவும் ரூ 16 செலுத்தி அதில் அங்கத்தினர்களாகலாம் என்றும், அவ்வாறு பதினாறு லக்ஷ ரூபாய் திரட்டி அதை வேதமோதுபவர்கட்கும் வேதம் ஓதுவிப்பவர்கட்கும் உதவித் தொகையளிப்பதற்குப் பயன்படுத்த வேண்டுமென்றும் ஜீயர் ஸ்வாமி அருளிச் செய்கையில் பலர் அப்போதே பதினாறு ரூபாய்கள் அந்நற்பணிக்கு அளிக்கின்றனர். மஹாராஷ்ட்ராவில் உயர்பதவி வகிக்கும் வஸந்தராவ் என்பவர் ஜீயர் ஸ்வாமியின் ஆஜ்ஞைபெற்றுப் பேசும்போது மஹாராஷ்ட்ர அர்சாங்கம் வேதமோதியவர்களுக்குச் சில உதவிகள் செய்ய முன் வந்திருப்பதாகத் தெரிவிக்கிறார். இதைக் கேட்கும் நாம் மற்ற அரசுகளும் இதைப் பின்பற்ற வேணுமென்று விரும்புகிறோம். மறுபடியும் ஸ்ரீராமகுணாநுபவம் நிகழ்கிறது. (ப்ர. அ) ஸ்வாமியின் கம்பீரமான கண்டத்தினின்றும் உண்டான சொற்பெருக்கில் யாவரும் மூழ்கிக் களிக்கின்றனர். "அதஸீஸுமஸுக்குமாராத் அவயவ் ஸௌந்தர்யலேச ஜிதமாராத், கோஸலஸுதா குமாராத் கோந்யோ தேவ: கரோதி ஸுகமாராத்" என்ற ச்லோகாநுஸந்தானத்தோடு வடமொழியில் அமைந்த உபந்யாஸம் பகவான் நால்வராய் அவதரித்துக் காட்டிய நன்னெறியைப்பற்றியதாய் நம் உளத்து ஆழப்பதிகின்றது. ஸ்ரீராமபிரான் பெரியோர் சொல் பேணுவதாகிற தர்மத்தையும், இளையபெருமாள் பகவச் சேஷத்வத்தையும், பரதாழ்வான் பகவத் பாரதந்த்ரியத்தையும் சத்ருக்நாழ்வான் பாகவத சேஷத்வத்தையும் காட்டி நிற்பர்கள் என்னும் ஸ்ரீராமாயண ஸாரார்த்த உபந்யாஸத்தோடு அன்றைய ஸபை நிறைவு பெறுகிறது.

(12—4—73) காலை வழக்கம்போல் புறப்பாடு நடைபெறுகின்றது. பூர்ணாஹுதிக்குப்பின் திருமொழி திருவாய்மொழி சாற்றுமுறை நிகழ்கின்றது. மாலை கோஷ்டியுடன் பெருமாள் நகரின் பல பகுதிகளுக்கு எழுந்தருள்கிறார். ஸ்ரீராமசந்த்ரோதயத்தால் பக்த ஜனஸமுத்ரம் பொங்குகின்றது. ஸ்ரீ ஜீயர்

ஸ்வாமிகட்கு "தக்ஷிணோபாஹ:" என்னும்படி விளங்கி இவ்வேள்வியை நிறை வேற்றுவதில் பங்குபெற்ற ஸ்ரீமான். உ.வே. தே. கம். கோபாலாசார்ய ஸ்வாமியும், ஸ்ரீமான் உ.வே. சநாபிஷேகம் கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியும், இவ்வேள்விக்குப் பல வகையிலும் துணைபுரிந்த பம்பாயில் வாழும் ஸோமானி குடும்பத்தினரும் நமது பாராட்டுக்குரியராகின்றனர்.

மறுநாள் வேதவித்துக்களும் அத்யாபகர்களும் ஸன்மானிக்கப்படுகின்றனர். உடனே நகராட்சித் தலைவர் (Mayor) அவர்கள் வேத விற்பன்னர்களுக்கு உபசார விழா நடத்துவதாக அறிந்து Town Hall க்குச் செல்கிறோம். வேதத்தின் சிறப்பைப்பற்றிப் பலர் சொற்பொழிவாற்றி இப்பெரிய பேற்றினைத் தில்லிவாழ் மக்கட்கு அளித்த ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகளை ஏத்துவதைக் காணும்போது "தம்பியைக் காணீரென்பார் தவமுடைத்துலகமென்பார் இம்பரிந் நகரிற்றந்த முனிவனை யுறைந்சு மென்பார்" என்ற கம்பர் பாசுரம் நினைவுக்கு வருகிறது.

ஸ்ரீ கங்கேச்வரானந்தா, பூரி சங்கராசாரிய ஸ்வாமி, ஸ்ரீ ஓங்காரநாத் ஸ்வாமி போன்ற மதத்தலைவர்களும், கரன்சிங், இந்திராகாந்தி போன்ற அரசியல் பெருந்தலைவர்களும் விஜயம் செய்த இவ்வரும்பெரு வேள்வியில் கலந்து கொண்டு கண்படைத்த பயனையும் செவிபடைத்த பயனையும் எய்தி ஊர் திரும்பியபின் நண்பர்களிடம் கூறுகிறோம்.

"இந்த ஸம்மேளனம் ஒன்பதுநாட்கள் நடைபெற்றது. காலையிலும் இரவிலும் அருளிச்செயல் கோஷ்டியும் பிற்பகலில் த்ரிமதஸ்தர்களும் குழுமிய வித்வத்ஸதஸ்ஸும் நடைபெற்றன. இம்மூன்றுவேளைகளிலும் பெரும்பாலும் ஸ்ரீ காஞ்சீ P. B. A ஸ்வாமியின் உபந்யாஸங்கள் ஒருமணி அவகாசத்திற்குக் குறையாமல் நடைபெற்று வந்தன. காலைவேளைகளில் ஸேவிக்கும் திவ்யப்ரபந்தங்களையடியொற்றின உபந்யாஸங்கள் பெரும்பாலும் திருமங்கையாழ்வாரருளிச் செயல்களைப் பற்றியவை. இராவேளையுபந்யாஸங்கள் நியமேந திருவாய்மொழியைப் பற்றியவை. பிற்பகலில் நடைபெற்ற ஸம்மேளனத்தில் நடந்த உபந்யாஸங்கள் வேத விசாரத்தில் ப்ராதிசாக்கியம் வேதபாஷ்யம் முதலானவற்றைச் சார்ந்தவை".

"நைந மாங்கிலேஹூம் ஸதகரதுஸோம் ஜாஸோ தரஸந கரௌம் அகாய் அகாய்
ரஸநா மாங்கி லேஹூம் ஸஹஸபந ஸோம் ஜாஸோ கோவிந்த குந காயோ ஜாய்
லங்காபதி ஸோம் ஸீஸ மாங்கி லேஹூம் ஜோ பந்தந கரும் பநாய் பநாய்
ஸஹஸபாஹு ஸோம் புஜ மாங்கி லேஹூம் தாநஸேன் கே ப்ரபு தரஸன கோ பாய்"

எனருற் போன்று இவ்வேள்வியைக் காணக் கண் ஆயிரம் இந்திரனிடமிருந்து பெறவேண்டும். இதன் சிறப்பைக்கூற அரவரசப் பெருஞ்சோதியிடமிருந்து வாயோரீரைஞ்நூறு பெறவேண்டும் என்பது மிகையாகாது.

இங்ஙனம்
நேரிலனுபவித்த
(அக்காரக்கனி) தி. அ. அனந்தாழ்வான்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சநபத்திராதிபரான ஸ்ரீமதுபயவே S கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் (புத்தூர் அட்வகேட்) ஸ்வாமியும் டில்லி நிகழ்ச்சிகளைப் பரிபூர்த்தியாக

அநுபவித்தவராதலால் அவருடைய பத்திரிகையின் மூலமாக வெளிவரும் விசேஷங்களையும் உலகம் காணப்பெறுமாக.

6—5—73 கல்கியில் இந்த ஸம்மேளனத்தைப் பற்றி எழுதியிருப்பதை அன்பர்கள் வாசித்து மகிழும் பொருட்டுக் கீழே வெளியிடுகிறோம்.

# மறைகளுக்கு மகோற்சவம்

பரப் பிரம்மத்தின் அருளைப் பெற சப்தப் பிரம்ம உபாஸனம் முக்கியம். ருக், யஜுர், ஸாமம், அதர்வணம் ஆகிய வேதங்களை வடிவமாகக் கொண்டதே சப்தப் பிரம்மம். சப்தப் பிரம்மத்தின் அருளை உலக மக்களுக்குக் கிடைக்கச் செய்வதற்கென்றே சமீபத்தில் வஸந்த நவராத்திரி தினங்களில் (ஏப்ரல் 4 முதல் 12ம் தேதி வரை) பாரதத்தின் தலைநகராகிய தில்லி மாநகரில் அகில இந்திய வேத வித்வத் சம்மேளனம் நடைபெற்றது. இதுவே ஸ்ரீராம நவமி உற்சவ சமயமாகும்.

ராம்லீலா மைதானத்தில் கூடாரங்களாலும் பந்தல்களாலும் நிர்மாணிக்கப்பட்ட ஸ்ரீஉஜாதர் ஸோமானி நகரில் நடைபெற்ற இந்த சம்மேளனத்தில் பங்கெடுத்துக் கொள்வதற்கென பாரதத்தின் பல மாநிலங்களிலிருந்தும் நான்கு வேதங்களையும் கற்றுணர்ந்த ஆயிரத்து ஐந்நூறுக்கு மேற்பட்ட வேதியர்கள் வந்தார்கள். இத்தகைய மாபெரும் வித்வத் சபைக் கூட்டத்தை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்று வெற்றிகரமாக நடத்திய தன் பெருமை ஸ்ரீதிரிதண்டி ஸ்ரீமந்நாராயண ராமானுஜ ஜீயர் சுவாமிகளைச் சாரும்.

தினமும் காலையிலும் மாலையிலும் ஸ்ரீஜீயர் சுவாமிகள் தலைமையில் நாலாயிர பிரபந்த கோஷ்டியினரும், வேதபாராயண கோஷ்டியினரும் பின்வர நகரைச் சுற்றிலும் வேத தர்மத்தின் வடிவான ஸ்ரீராமபிரானின் ஊர்வலம் நடைபெற்றது. அதையடுத்து நான்கு வேதங்களைக் கோஷிக்கும் ஆயிரக்கணக்கான வேதியர்களின் பாராயணம் தில்லி நகரில் எதிரொலித்தது. மற்றொரு புறம் இருநூறுபேர்கள் கொண்ட வைஷ்ணவ கோஷ்டி ஒன்று நாலாயிரபிரபந்தத்தைப் பாடியது. அருகில் அமைக்கப்பட்ட பந்தல்களில் பாரதத்தின் பதினான்கு பெருமொழிகளில் இராமாயணக்காவிய பாராயணம் நடைபெற்றது. அதேசமயம் நகரின் கிழக்குக் கோடியில் கூரைவேய்ந்து அமைக்கப்பட்ட யாகசாலையில் கொலுவிருந்த ஸ்ரீராமபிரானைச் சுற்றிலும் ஒவ்வொரு வேதத்திற்கு ஒன்றாக (யஜுர் வேதத்திற்கு மட்டும் கிருஷ்ண யஜுர், சுக்லயஜுர் என்று இரண்டு பிரிவுகள் உண்டு) ஐந்து யாக குண்டங்களில் யாகம் நடைபெற்றது. ஸ்ரீராமபிரான் சந்நிதிமுன் ஸ்ரீநாராயண ராமானுஜ ஜீயர் சுவாமிகளின் தலைமையில் நூற்றுக்கணக்கான பக்தர்கள் பகலில் விஷ்ணு சகஸ்ரநாம அர்ச்சனையும் இரவில் லட்சுமி பூஜையும் நடத்தினர். மற்றொருபுறம் ஸ்ரீபாகவத உபந்நியாஸம் நடந்து கொண்டிருந்தது. தினமும் பிற்பகலில் காஞ்சீபுரத்திலிருந்து வந்திருந்த பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீஅண்ணங்கராச்சாரிய ஸ்வாமி சமஸ்கிருத மொழியில் நடத்திய வேத சர்ச்சை குறிப்பிடத்தக்கது. இரவில் நகரின் மத்தியில் அமைக்கப்பட்டிருந்த கலையரங்க மேடையில் மதுராவைச்சேர்ந்த திரு ஞானானந்த சதுர்வேதியின் ராம்லீலா மண்டலி குழுவினர் இராமாயண காவியத்தைத் தொடர் நாடகமாக நடத்தினர்.

தமிழ்நாட்டிலிருந்து சுமார் எண்ணூறு வேதவிற்பன்னர்களும் கேரளத்திலிருந்து சுமார் இருநூறு வைதிகர்களும் வந்திருந்தனர். அதாவது தேசம் முழுவதிலுமிருந்து வந்தோரில் பாதிக்குமேல் இவ்விரு மாநிலங்களைச் சேர்ந்தவர்கள். 'வேதம் நிறைந்த தமிழ்நாடு' என்ற பெருமை மெய்யாயிற்று.

சுஜாதர் நகரில் தங்கியிருந்த நூற்றுக்கணக்கான வேத சிரோமணிகளுக்குத் தங்கும் இடவசதியும் அவரவர்களுக்குத் தேவையான தென்னக அல்லது வடக்கத்திய பாணி உணவு வகைகளும் சிறப்பாக அளிக்கப்பட்டன. பலமொழிகள் பேசும் மாநிலத்தார் இங்கு ஒன்று கூடிய போதிலும் அவர்கள் பரஸ்பரம் உரையாட முடியாமல் தவிக்கவில்லை. காரணம் அவர்களனைவரும் சமஸ்கிருத மொழியில் வெகு லாகவமாக சம்பாஷித்துக் கொண்டதுதான். கேட்பதற்கே கம்பீரமாகவும் மதுரமாகவும் இருந்தது.

தில்லியில் சரித்திரம் கண்டிராதபடி நடந்த வேத வித்வத் சிரோமணிகளின் மகாநாட்டைப் பெருமை செய்ய மேற்கு வங்காளத்தின் பிரசித்தி பெற்ற ஸ்ரீசிதாராம் ஓங்கார் நாத்சுவாமிகளும், பூரிமடத்து ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளும், காஞ்சீபுரத்து அண்ணங்கராச்சாரிய சுவாமிகளும் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. பிரதமர் இந்திராகாந்தியும், மத்திய அமைச்சர் கரண்சிங்கும் சம்மேளனத்துக்கு விஜயம் செய்து வேதத்தின் மகிமையை உணர்ந்து போற்றிப் பேசினர். சம்மேளனத்தில் கலந்து கொண்டவர்களில் நூற்றெட்டு பேர்களுக்குப் பாரதராஷ்டிரபதி சால்வை போர்த்திப் பெருமை அளித்தார்.

ஆயிரக்கணக்கான வேத பண்டிதர்கள் பங்கு கொண்ட சம்மேளனத்திற்குத் தில்லி வாழ்மக்கள் வடக்கத்தியர், தெற்கத்தியர் என்ற பேதமின்றித் திரளாக வந்திருந்து பாரதத்தின் புராதன ஆன்மிக கலாசாரத்தைப் பருகிப் பயனடைந்தனர்.

—இங்ஙனம் கல்கியில் வெளிவந்த கட்டுரை.

---

## கடிதம்—2

# ஸ்ரீ ராமாநுஜ பத்ராதிப ஸ்வாமிக்கு விஜ்ஞாபனம்

### புனர்வஸு பத்ரிகையைப்பற்றி.

ஸ்ரீமதுபயவே மஹாமஹோபாத்யாய ஸ்வாமி ஸந்நிதியில் அடியோங்களின் ஸப்ரணாம விஜ்ஞாபனம்.

சில சில மாதங்களுக்கொருமுறை சென்னையிலிருந்து காட்சி தரும் புனர்வஸு பத்ரிகையை (ஏப்ரல் மாதத்து இதழ்) இன்று காணப்பெற்றோம். இதில் திருப்பாவை உரைகள்-ஒரு விமர்சனம் என்னும் கட்டுரை ப்ரஹ்மஸ்ரீ அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாத்தாச்சாரியார் என்பவரால் எழுதப்பட்டு வெளிவந்துள்ளது. இதிலுள்ள எழுத்துப்பிழைகளை எண்ணிமுடியாதென்பது தனிப்பட்ட விஷயம். காலஞ்சென்ற D.T. தாதாசார்யரென்பவர் இதே புனர்வஸு பத்ரிகையில் 'சூடிக்கொடுத்த சுடர்கொடி' என்னும் தலைப்பில் திருப்பாவையினுடையவும் அதன் வ்யாக்யான கர்த்

தாக்களான ஆசார்யர்களுடையவும் தூஷணங்கள் மலிந்த கட்டுரைகளை எழுதி வெளியிட்டு வந்தார். அவர் மறைந்தாலும் அவருடைய ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய நானிருக்கிறேனென்று காட்டுகிறார் போலும் இவ்வக்னிஹோத்ரி! இவர் அருளிச்செயலில் நெடுநாளாகவே பகைகொண்டவரென்பது ஜகத் ப்ரஸித்தம். இவரை நோக்கியே ஸ்வாமியினுடைய த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வம் என்கிற நூல் பலவாண்டுகட்கு முன்பு அவதரித்துள்ளது. உத்தரராமசரித நாடகத்தில் "வைதேஹ்யா: பரக்ருஹ வாஸ தூஷணம் யத் ஏதத் தத் புநரபி தைவதுர் விபாகாத் அலர்க்கம் விஷமிவ ஸர்வத ப்ரஸ்ருப்தம்" என்கிற ச்லோகத்தை நினைவூட்டும்படியான நீண்ட கட்டுரையை அக்னிஹோத்ரி வெளியிட்டுள்ளார். புனர்வஸு பத்ராதிபர்க்கு இத்தகைய வ்யாஸங்களே எளிதாகக் கிடைக்கின்றன போலும்! இக்கட்டுரை தேவரீருடைய கடாக்ஷ விக்ஷணலக்ஷ்யமாகவில்லையா? இது உபேக்ஷிக்கத் தக்கதன்றென்று ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களான பல வித்வான்களும் கூடப் பேசி வருகிறார்கள். விரைவில் கடாக்ஷித்தருளி இருளையும் மருளையும் நீக்கியருள வேணுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

இப்படிக்கு,

வித்வான் எம்பார் ஸ்ரீநிவாஸாசாரியார்,

,, திருவேங்கடாசாரியார்,

(திருநகரி.) 13—5—73

பத்ராதிபரின் குறிப்பு: ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை 296—297 வெளியிட ஸந்நாஹம் செய்யும் ஸமயத்தில் இக்கடிதம் நமக்குக் கிடைத்தது. இதிற் குறிப்பிட்ட புனர்வஸு பத்ரிகை இப்போதுதான் (14—5—73) நமது பார்வைக்கு வந்தது. அடுத்த இதழில் கவனிப்போம். "செய்வன திருந்தச் செய்" என்றபடி திருந்தச் செய்வோம்.

பத்ராதிபர், **P. B. A.**

## கடிதம்-3

# ஷஷ்ட்யப்தபூர்த்தி விசேஷம்

தில்லியில் உயர்பதவி வகித்து ஓய்வு பெற்றவரான ஸ்ரீமான் உ. வே. அகரம் ராமாநுஜாசாரியரின் அறுபதாண்டு நிறைவு விழா 24—3—73 தொடங்கி 28—3—73 வரை ஐந்து நாட்கள் சென்னையில் சைதாப்பேட்டையில் அவரது இல்லத்தில் நடைபெற்றது. தினமும் காலையிலும் மாலையிலும் உபயவேத வித்வான்களால் திவ்யப்ரபந்தஸேவையும் வேதபாராயணமும் நடைபெற்றது. இவருடைய ஆசார்யரான ஸ்ரீமதுபயவே. குமார ஸ்ரீசைலாசார்யஸ்வாமி (புகைப்படத்தில் வலப் பக்கம் ஸேவை ஸாதிப்பவர்) எழுந்தருளியிருந்து தம்பதிகளை ஆசீர்வதித்தருளினர். ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதிகளான ஸ்ரீமன் நாராயணராமாநுஜ ஜீயர்ஸ்வாமி, ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர் ஸ்வாமி, போன்ற பல பெரியோர்களுடைய மங்களாசாஸனம் இந்த விசேஷ ஸந்தர்ப்பத்தில் இவர்க்குக் கிடைத்தது. திவ்யதேச மாலை மரியாதைகளும் கிடைத்தன. மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யஸ்வாமி தவிர்க்க முடியாத சில காரணங்களால் நேரில் எழுந்தருளமுடியவில்லை. ஆகையால் தில்லியில் இப்பெரியார் ஸ்ரீவைஷ்ண

வத்திற்குச் செய்திருக்கும் [illegible] பாராட்டி வடமொழியில் பஞ்சரத்ன மாலிகா என்ற பெயரில் [illegible] ரத்னங்களை இயற்றியருளியதோடு சால்வை (யான்றும் சமஅ ப்ரதிநிதி [illegible] அனுப்பியருளினார்.



இவர் திருமலையில் ஸ்ரீமன் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் லக்ஷ்மீ நாராயண ஸஹஸ்ர ஹோமகுண்டக்ரதுவை நன்முறையில் நடத்த அவருடைய காரியதரிசியாக இருந்து துணைபுரிந்தார். தில்லியில் மணவாள மாமுனிகள் ஆறுவது நூற்றாண்டு விழாக்குழுவின் செயலாளராகவும் ஸ்ரீமன் நாராயணராமாநுஜ ஜீயர்ஸ்வாமியை President ஆக உடைய ஸ்ரீராமமந்திரின் Founder Secretary ஆகவும் இருந்து அரும்பணிகள் செய்தார். இதைப்பாராட்டி தில்லியிலிருந்து நண்பர்கள் பலர் இவர்க்கு வாழ்த்துக்களனுப்பினர். ஸ்ரீபெரும்புதூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானாரின் திருவுருவொக்கும் வண்ணம் டெல்லியில் உடையவரை ப்ரதிஷ்டை செய்வித்த பெருமை இவரையே சேரும்.

இங்ஙனம்
D. KRISHNAMURTHY.

பத்ராதிபர் குறிப்பு:— இந்த ஸ்ரீராமாநுஜாசாரியர் நம்முடைய ஸம்ப்ரதாயத்திற்கு ரத்னதீபமாக விளங்குபவர். மேன்மேலும் சதாபிஷேகம் முதலியவற்றையும் அடைவே அநுபவித்து நீடூழிவாழ வேணுமென்று மனமார்ந்த மங்களாசாஸனம் செய்கிறேன்.

# அபூர்வார்த்த ரத்னநிதி

(முன் தொடர்ச்சி)

## 44. உன்னுமவர்க்குள்ளமுருகும்

திருவாய்மொழி நூற்றந்தாதியில் இன்னுயிர்ச்சேவலும் என்ற திருவாய் மொழிப் பதிகத்திற்கு ஸாரார்த்த ஸங்க்ரஹமாக இட்டருளின "இன்னுயிர் மால் தோற்றினது" என்கிற பாசுரத்தின் ஈற்றடி உன்னுமவர்க்குள்ளமுருகும் என்றது. வெண்பாவின் ஈற்றடியெல்லாம் முற்றுயிர் கொண்டது என்பது உலக மறிந்தது. இவ்வீற்றடியைச் சீர் பிரிக்கும்போது உன்னுமவர்க் குள்ள-முருகும் என்று முற்றீருகப் பிரிப்பர் பலர். இங்ஙனே பிரிப்பதில் வெண்டளை பிறழாமலிருந்தாலும் ஈற்றுச்சீர் இலக்கண விதிக்கு ஒவ்வாது. ஏனெனில், ஈற்றுச்சீரின் வாய்பாடு நாள், மலர், காசு, பிறப்பு என்பதாம். ஈற்றுச்சீரை ஈரசைச் சீராகக் கொண்டால் உகர வீற்றதாகவே இருக்க வேண்டும். 'உருகும்' என்றிருக்கத் தகாது. உருகு என்றிருக்கலாம். அது பொருட்குப் பொருந்தாது. ஆகவே இடைச்சீரை உள்ளமுரு என்று கூவிளங்காய்ச் சீராகப் பிரித்துக்கொண்டு (கும்) என்னுமெழுத்தை 'நாள்' என்னும் வாய்பாட்டுக்குறுப்பாகக் கடைச்சீராகப் பிரித்துக்கொள்ள வேண்டும். இப்படியே அந்த நூற்றந்தாதி தன்னிலேயே எங்காதலுக்கடி என்கிற பாசுரத்தின் ஈற்றடி "உள்ளினர்க்குத் தீங்கை யறுக்கும்" என்பதாம். அதிலும் 'அறுக்கும்' என்பதைக் கடைச் சீராகப் பிரிக்கலாகாது. (கும்) என்பதையே கடைச்சீராகக் கொள்ளவேண்டும். இதுதான் இலக்கணவழிக்குப் பொருந்தும். "குன்றிவிடுமே பவக்கங் குல்" "பாடணைவார்க் குண்டாமின் பம்" "துன்புற்றான் மாறனந் தோ" "வன்மையடைந்தான் கேச வன்" என்றிவை முதலான அடிகளில் (குல்) (பம்) (தோ) (வன்) என்னுமிவை கடைச்சீராக வருதல் காண்க.

## 45. ஊற்றின் கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராயே

திருவாய்மொழியில் *பொன்னுலகாளீரோ* என்கிற பதிகத்திற்குப் பயனுரைக்கும் பாசுரமான *மாற்றங்களாய்ந்து கொண்டு* என்கிற பாசுரத்தின் ஈற்றடியிது. இப்பதிகம் கற்றார்க்குப் பயனுரைப்பதாமிது. ஒவ்வொரு பதிகத்திற்கும் முடிவில் பயனுரைத்தருளா நின்ற ஆழ்வார் 'பெறலாகும் வானேங்கு பெருவளமே' என்றும் 'ஏதமிலாயிரத்திப்பத்து ஓதவல்லார் பிறவாரே' என்றும் 'கற்பரேல் கல்வி வாயுமே' என்றும் பெறக்கூடிய அபூர்வமானதொரு பலத்தை அருளிச்செய்து வருவதைக் காணா நின்றோம். இங்கு அப்படியன்றிக்கே, இவையுமொரு பத்தும் வல்லார் நீராயுருகா நிற்பர் என்பது பலனாகுமோ? அபூர்வ வஸ்து லாபமேயன்றோ பலனாகச் சொல்லக் கூடியது? இங்கு அபூர்வ வஸ்து லாபம் ஒன்றுமில்லையே. இது எப்படிப் பலனாகும் என்று சிலர் சங்கிப்பதுண்டு. கேண்மின். இதுதான் அபூர்வமான பலன் என்று உணர வேண்டும். அருளிச் செயலை ஓதுமவர்கள் சுஷ்கஹ்ருதயரன்றிக்கே இளகின நெஞ்சையுடையராய் நீராய் உருகி நிற்பரென்பது பலன்கள் எல்லாவற்றிலும் மேம்பட்ட பலனாகும். இப்பேறு வரப்ரஸாதமடியாகக் கிடைக்கக் கூடியதென்பது ஆழ்வார் திருவுள்ளமென்க.

## 46. எற்றைக்குமேழேழ் பிறவிக்கும்

ஆழ்வார்களெல்லாரும் பெரும்பாலும் பகவான் பக்கலிலே வேண்டினது பிறப்பறுக்கவேணுமென்று. "இனிப்பிறவியான் வேண்டேன்" என்றும் "ஆதலால் பிறவி வேண்டேன்" என்று மிப்புடைகளிலே யன்றோ ஆழ்வார்களின் பாசுரம். அப்படியிருக்க ஆண்டாள் ஒருத்தி மட்டும் பிறவியை வெறுக்காததோடு மேன் மேலும் பிறந்து கொண்டேயிருக்கவேணுமென்கிற ஆசையை வெளியிடுவதாக காட்டுமிந்தப் பாசுரத்தின் கருத்து ஆராயப்படவேண்டும். ஆராயுமளவில் ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் எம்பெருமானுடைய அவதாரம் தோறும் பிராட்டியும் அவதரித்தே வருகின்றுளென்பதைக் காட்டும் சுலோகங்கள் நினைவுக்கு வரும். (அதாவது) "தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர்தேஹாநுரூபாம் வை கரோத்யேஷா ஆத்மநஸ்தநும். ராகவத்வே அபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ண ஜந்மநி, அந்யேஷு சாவதாரேஷு........" இத்யாதி சுலோகங்களினுல் எம்பெருமானுடைய அவதாரங்கள் தோறும் பிராட்டியும் கூடவே அவதரிப்பது தெரிவிக்கப் படுகிறது. அவ்வண்ணமாகவே ஆண்டாள்தானும் தேவதேவ திவ்யமஹிஷியாய்க் கொண்டு அவதரிப்பவள் என்பது ஸூசிப்பிக்கப் படுகிறது. இங்கு "எற்றைக்குமென்றது தோன்றப் பிறந்து" இத்யாதியான ஆசார்யஹ்ருதய சூர்ணையை வ்யாக்கியானத்தோடு அநுஸந்திப்பது.

## 47. எட்டினுய பேதமோடிறைஞ்சிநின்று

எட்டினுயபேதமோடிறைஞ்சுகையாவது—"மநோபுத்த்யபிமாநேந ஸஹ ந்யஸ்ய தராதலே, கூர்மவச்சதுர; பாதாந் சிரஸ்தத்ரைவ பஞ்சமம்". என்றபடி ஸாஷ்டாங்கப்ரணாமம் பண்ணுகை. மேலெடுத்துக் காட்டிய சுலோகத்தில் எட்டு அங்கங்கள் காட்டப்பட்டுள்ளன. அவையாவன, இரண்டு கைகள், இரண்டு கால்கள், சிரஸ்ஸு, மனம், புத்தி, அபிமானம் என்பன. இவற்றுள் ஐந்து அங்கங்கள் ஸ்பஷ்டமாகத் தெரியுமவை. மனம் புத்தி அபிமானம் என்பவை மூன்றும் அந்த:கரண வ்ருத்தியைத் தெரிவித்தபடி. அன்றியே பாஞ்சராத்ரங்களில் அஷ்டவித பக்தி சொல்லப்பட்டுள்ளது. அதாவது, "மத்பக்தஜநவாத்ஸல்யம் பூஜாயாஞ் சாநுமோதநம், ஸ்வயமப்யர்ச்சநஞ் சைவ மதர்த்தே டம்பவர்ஜனம், மத்கதா ச்ரவணே ஸக்தி: ஸ்வரநேத்ராங்கவிக்ரியா, மமாநுஸ்மரணம் நித்யம் யச்ச மாம் நோபஜீவதி, பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மின் ம்லேச்சேபி வர்த்ததே தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்." (1) பகவத் பக்தர்களிடத்தில் அன்பு பூண்டிருத்தல், (2) அர்ச்சாவதாரத்தில் ஆதரம் கொண்டிருத்தல், (3) ஆளிட்டந்திதொழ வொண்ணுதென்றுப்போலே தானே பகவதாராதனம் செய்கை, (4) பகவத் கார்யங்களில் டம்பமற்றிருக்கை, (5) பகவத் கதைகளைக் கேட்பதில் ஆசைகொண்டிருக்கை, (6) "உள்ளெலாமுருகிக் குரல் தழுத்தொழிந்தேன்......கண்ணநீர் சோர" என்கிறபடியே அங்கவிகார முற்றிருக்கை, (7) எம்பெருமானை இடைவீடின்றிச் சிந்திக்கை, (8) எம்பெருமானிடத்து ஒரு பலனைக்கொள்ள விரும்பாமை. ஆகியவிவை அஷ்டவித பக்திகளாகச் சொல்லப்பட்டன. இங்கு "எட்டினுய பேதமோடிறைஞ்சி நின்று" என்பதனுல் அதுவும்

விவக்ஷிதமாகலாம். திருமாலையில் "பழுதிலாவொழுகலாற்று" என்கிற பாசுரத்தில் "நின்னோடொக்க வழிபடவருளினாய்" என்றவிடத்தில் இந்த ப்ரமாண வசனங்கள் உட்கொள்ளப்பட்டிருக்கின்றன. இதில் "ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்" என்றதையே, 'நின்னோடொக்க வழிபடவருளினாய்' என்று ஆழ்வார் மொழிபெயர்த்தார்.

## 48. எட்டினோடிரண்டெனும் கயிற்றினால் மனந்தனை

இது திருச்சந்த விருத்தத்தில் 83-ம் பாசுரத்தின் மூன்றாமடி. இதில் எட்டு பிரண்டுமாகிற கயிற்றினால் மனத்தைக் கட்டவேணுமென்று சொல்லப்படுகிறது. உலகத்தில் ஒன்றைக் கட்டவேணுமானால் கயிற்றைக்கொண்டுதானே கட்டுகிறோம். கயிற்றுக்குப் பாசமென்பது ஒரு பெயராக வடமொழியில் வழங்கப்படும். பகவத் கீதையில் "ஆசாபாச சதைர் பத்தா:" என்று கூறியது இங்கு நினைக்கத்தக்கது. மனத்தைக் கட்டுவதற்குரிய கயிற்றைத் திருமழிசைப்பிரான் தெரிவிப்பது "எட்டினோடிரண்டு" என்பதாக. இதை மேலெழப்பார்ப்பவர்கள் எட்டு என்பது அஷ்டாக்ஷரம், இரண்டு என்பது த்வயமந்த்ரம் இவைகொண்டு மனத்தைக்கட்டவேணுமென்று சொல்லுவதாக நினைப்பர்கள். ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றும் பொருளாவது எட்டோடிரண்டு சேர்ந்தால் பத்து. இவ்விடத்தில் பத்து என்கிற எண் விவக்ஷிதமல்ல. "பத்துடையடியவர்க்கெளியவன்" என்றபடி பக்திக்கும் பத்து என்று பேருண்டாதலால் அப்பொருளே இங்கு விவக்ஷிதம். இதை வடநூலார் "லக்ஷிதலக்ஷணை" என்பர்கள்.

## 49. எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லையென்றே

திருவாய்மொழியில் (4—10—6)ல் "போற்றி மற்றோர் தெய்வம் பேணப் புறத்திட்டு உம்மையின்னே தேற்றி வைத்தது எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லையென்றே" என்பன முன் இரண்டடிகள். தேவதாந்தர பஜனம் பண்ணி அதோகதியை அடைந்தொழியவேண்டாமென்று உபதேசித்தருளின ஆழ்வாரை நோக்கி தேவதாந்தர பக்தர்களான சிலர் நாங்களும் நாராயண பஜனம் பண்ணி வாழ்ந்து போகலாமாயிருக்க எங்களையெம்பெருமான் அதோகதிக்கீடான வழியில் சேர்ப்பித்தது எதனாலென்று கேட்க, அதற்கு விடையளிப்பதிது. இங்கு "எல்லீரும் வீடுபெற்றாலுலகில்லையென்றே" என்பதுதான் மருமமாகவுள்ளது. மேலெழப்பார்க்குமளவில் இதற்கு என்னபொருள்தோன்றுமென்றால் எல்லாரும் ஸ்ரீமந்நாராயணனையே தொழப்பெற்றால், எல்லாருமே வீடு பெற்று விட்டால், லீலா விபூதி அடியற்றுப்போய்விடும். அங்ஙனம் போகாமைக்காகவே எம்பெருமான் உங்களை இதர தேவதா பஜனம் பண்ணி ஸம்ஸாரிகளாய்த் தொலைந்து போம்படி செய்து வைத்தான்—என்பதாகப் பொருள் தோன்றும். இப்படிப்பட்ட பொருள் எம்பெருமானுக்கு மிக்க அவத்யத்தை விளைவிக்குமதாகையாலே ஆழ்வார் இப்பொருள்பட அருளிச்செய்ய ப்ரஸக்தியில்லை; ஆறாயிரப்படி முதலான வியாக்கியானங்களில் இப்பொருள் நெஞ்சாலும் நினைக்கப்படவில்லை. திருவாய்மொழிக்கு ஸம்ஸ்க்ருதப் பதவுரையிட்டு ஒன்பதினாயிரப்படி இயற்றிய தசோபநிஷத் பாஷ்யகாரரான ஸ்ரீரங்கராமாநுஜ ஸ்வாமி மட்டும் இப்பொருளையே பணித்து வைத்தார்.

பிள்ளான் முதலிய ஸகல பூருவாசாரியர்களும் திருவுள்ளம் பற்றின பொருள்: உலகில்லை யென்றே என்றவிடத்தில் உலகு என்பதற்கு சாஸ்த்ர மர்யாதை என்று பொருள். அவரவர்கள் பண்ணின புண்யபாபரூப கர்மங்களுக்குத்தக்கபடியே பலன் கொடுப்பதென்று ஒரு சாஸ்த்ர மர்யாதை ஏற்பட்டிருக்கின்றது. நீங்கள் முற்பிறவிகளில் பிரபலமான தீவினைகளைச் செய்தபடியால் அவற்றின் பலனுகை இப்பிறப்பில் உங்களை க்ஷுத்ர தேவதா பஜனம் பண்ணும் படியாக உபேக்ஷித்திடலாயிற்று; கொடிய பாவங்கள் செய்த உங்களை புண்யாத்மாக்களைப்போலே ஸ்ரீமந் நாராயண ஸமாச்ரயணமே செய்யும்படி பண்ணி விடுவதானுல் அப்போது முன்சொன்ன சாஸ்த்ர மர்யாதை அழிந்துவிடுமன்றே? அங்ஙனம் அழியாமைக்காகவே உங்களை இங்ஙனே நிறுத்திவைத்தது என்கை. வேதாந்த தேசிகனும் "தந்தத்கர்மாநுரூபம் பல விதரணத:" என்று இவ்வர்த்தத்தையே தாத்பர்ய ரத்நாவளியில் வெளியிட்டருளினுர்.

## 50. எத்திறமுரலினேடிணைந்திருந்தேங்கியவெளிவே

பட்டர் நம்மாழ்வாருக்கு 'க்ருஷ்ண த்ருஷ்ணுதத்வம்" என்று திருநாமம் சாற்றினர். க்ருஷ்ணுவதாரத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவர் இவ்வாழ்வார். அதிலும் வெண்ணெயுண்டப்ரஸ்தாவத்தில் மிக மிக ஈடுபடுபவர். திருவிருத்தத்தில் "நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னும் ஈனச்சொல்லே"—என்று அது கொண்டே தலைக்கட்டினுர். அச்சரிதையை மீண்டும் நினையாமலே இருக்கவேண்டுமிவர். திருவாய்மொழியில் முதற்பதிகத்தில் தத்வபரமாகச் சிலவிஷயங்களை அருளிச்செய்து இரண்டாம் பதிகத்தில் ஸம்ஸாரிகளுக்கு உபதேசம் செய்தருளி மூன்றும் பதிகத்தில் கண்ணபிரானுடைய ஸௌலப்ய குணத்தை [எளிமைக் குணத்தை] அனுபவிக்க விழிந்து கண்ணனுடைய நவநீத சௌர்யத்தை பேசப்புகுந்து "மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரவிடையாப் புண்டு எத்திறமுரலினேடிணைந்திருந்து ஏங்கிய வெளிவே" என்று சொல்லுகையில் இடையிலே எத்திறம்! என்று தளர்ந்தார். [மத்துறுகடை வெண்ணெய்]—அதாவது யசோதைப் பிராட்டி மத்தையுறுத்தித்தயிர் கடையும்போது அவளது நிழலிலே யொதுங்கியிருந்து களவு வழியிலே வெண்ணெயை அள்ளி அமுது செய்ய கையோடே பிடியுண்டு உரலோடே மார்வை நெருக்கிக்கட்டியிட்டு வைக்கப்பெற்று அழுது ஏங்கி நின்ற நிலைமை என்னே! என்று கரைகின்றுராழ்வார். இங்கு ஆறுமாதம் மோஹித்திருந்ததாக இதிஹாஸம். ஆசார்ய ஹ்ருதயத்தில் "மூவாறுமாஸம் மோஹித்து" என்றருளிச்செய்த மூவாறு மாஸங்களில் இது முதலாறு மாஸம். கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "த்வாமந்யகோபக்ருஹ" என்னும் சுலோகத்தில் இந்த கட்டுண்ட கதையை அநுஸந்தித்து "தாத்ருங் நதே சரிதம் ஆர்யஜநா:ஸஹந்தே"—என்றுர். இங்கு ஆர்யஜநா: என்றது நம்மாழ்வாரை. "நஸஹந்தே" என்றதனுல் மோஹித்திருந்தபடியை ஸூசிப்பித்தபடி.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்:



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்:

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் மஹாமஹிமோபாத்யாய
அண்ணங்கராசார்ய ஸ்வாமி
தொகுத்தெழுதிய

# திவ்ய ப்ரபந்த ஸகலத் கதாம்ருதம்

ஆழ்வார் அருளிச்செயல்களில் அனுஸந்திக்கப்பட்டுள்ள
பலநூற்றுக்கணக்கான இதிஹாஸபுராண
கதைகளுக்கு விவரணம்.

ஸ்ரீ ராமாநுஜன் பதிப்பு.
1975.

இதன் விலை
இரண்டு ரூபாய் மட்டும்

கிடைக்குமிடம்
க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.



# புதிய பதிப்புக்கள்

(1) அண்ணஸ்வாமியின் அமுதமொழியாயிரம் (முதல் ஐந்நூறு) விலை ரூ 5—00

(2) ஸ்ரீ தேசிகஸ்தோத்ரமாலை (12 ஸ்தோத்ரங்களுக்கு P. B. A. ஸ்வாமி ஸாதித்த எளிய இனிய தமிழுரை) விலை ரூ 5—00

(3) ஸ்ரீ விஷ்ணுபுராணம் (ஸம்ஸ்க்ருதம்) (ஸ்ரீ விஷ்ணுசித்தீயம் என்னும் வடமொழி வ்யாக்யானத்துடன் தேவநாகரிலிபி) விலை ரூ 12—00

(4) பகவத்கீதா ஸாரஸங்க்ரஹம் (தமிழ்) விலை ரூ 1—00

மற்றும் பல நூற்றுக்கணக்கான நூல்களுக்கு கியாட்லாக்கு தருவித்துக் காண்க.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# திவ்யப்ரபந்த பகவத் கதாம்ருதம்

நாலாயிர திவ்யப்பிரபந்தங்களில் எடுத்தாளப்பட்ட பகவத் கதைகளின் விவரணம்

—......—

(ஸ்ரீகாஞ்சி. அண்ணங்கராசாரியர் எழுதியது)

எம்பெருமானுக்குள்ள திருநாமங்கள் பலவற்றினுள் 'பிறப்பிலி' என்பதும் ஒரு திருநாமம். பிறவாதவன் என்பது அதன் பொருள். இப்படிப்பட்ட எம்பெருமானை "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா!" என விளிக்கின்றார்கள் ஆழ்வார்கள். "பலபிறப்பாய் ஒளிவரு முழுநலம்" என்கிறார்கள். "பிறந்தவாறும்! வளர்ந்தவாறும்!" என்று மோஹிக்கிறார்கள். பிறப்பிலியான பெருமான் பல அவதாரங்களெடுக்கிறானென்றால் இஃது ஒன்றோடொன்று முரண்படுமன்றோ என்ன வேண்டா; நம்மைப்போல கருமமடியாகப் பிறவாதவன்; (ஆயினும்) அநுக்ரஹமடியாகப் பல அவதாரங்கள் செய்தருள்பவன் என்பவாதலால் பொருந்தும். "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே" [சிஷ்டர்களை வாழ்விக்கும் பொருட்டும், துஷ்டர்களை ஒழிக்கும் பொருட்டும், தருமநெறிகளை நிலை நிறுத்தும் பொருட்டும் அவ்வக் காலங்களில் நான் அவதரிக்கிறேன்] என்று கீதையில் எம்பெருமான் தானே சோதிவாய் திறந்து அருளிச்செய்துள்ளான்.

இப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருவவதாரங்களையும் அவ்வவதார சேஷ்டிதங்களையும் உள்ளபடி அநுஸந்திக்குமவர்கள் பிறப்பிலிகளாகப் பெறுவர்களென்பதை எம்பெருமான் தானே (பகவத்கீதையில்) அருளிச்செய்து வைத்தான்; "ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:, த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந!" என்றது காண்க.

எம்பெருமானுடைய அவதாரங்களுக்கும் அவதார சேஷ்டிதங்களுக்கும் எல்லையில்லை; அவை ஸ்ரீராமாயண மஹாபாரதாதிகளான இதிஹாஸங்களிலும் அஷ்டாதச புராணங்களிலும் மற்றும் பலவற்றிலும் மிகவிரிவாகப் பேசப்பட்டுள்ளன. அவற்றுள் முக்கியமாகவும் ஸாரமாகவுமுள்ள சில அவதார சேஷ்டிதங்களை நம் ஆழ்வார்கள் உகந்தருளித் தமது திவ்வியப்பிரபந்தங்களில் வாய்வெருவியிருக்கின்றார்கள். அந்த பகவத் கதைகளை நன்றாகத் தெரிந்துகொண்டு நாடோறும் ஸ்மரித்துவருவது ஒவ்வொருவர்க்கும் அவசியமாதலால், வடமொழி யிதிஹாஸ புராண வுதவி கொண்டு அவ்வரலாறுகளை விரித்துரைப்போமிங்கு.

## 1. மத்ஸ்யாவதார வரலாறு

ஒரு பிரமகல்பமுடிவில் பிரமசம்பந்தமான நைமித்திக ப்ரளயம் உண்டாயிற்று; அப்பொழுது பூமி முதலிய உலகங்கள் கடலாற் சூழப்பட்டு மூழ்கும் ஸமயத்தில் நித்திரை தெளிந்தெழுந்து அந்த ஜலத்தில் படுக்க யத்தனித்த பிரமனது முகத்திநின்றும் வெளிக்கிளம்பின நான்கு வேதங்களையும் ஹயக்ரீவனென்னுமோர்

தானவன் அபஹரித்துக் கொண்டுபோய் விட்டான்; அப்போது வேதங்கள் தொலேந்தது கண்டு திருமால் ஓர் சிறிய மீன்வடிவு கொண்டார். அக்காலத்தில் தவத்தின் பெருமையினுல் ஜீவித்து, கிருதமாலா நதியின் கரையில் திருமாலே நோக்கித் தவஞ்செய்துகொண்டிருந்த ஸத்யவ்ரதனென்னு மோர் ராஜரிஷி ஜல பானம் பண்ணிக்கொண்டு பிழைத்திருந்தார்; அவர் ஜலதர்ப்பணஞ் செய்கையில் அவரது இரண்டு கைகளுக்குள் ஒரு சிறிய மீன் அகப்பட்டுக்கொண்டது; அதனே அவர் ஜலத்தில் விட்டார்; அப்போது அந்த மீன் 'ஓ தயாளுவான ராஜரிஷியே! என்னே இப்படி ஜலத்தில் விட்டீரே, என் இனத்தார் என்னே விழுங்கி விடு வார்களே; என்னே நீர் காப்பாற்றியருளவேணும்' என்ன; அவர் அதனேத் தன் கமண்டல தீர்த்தத்தில் எடுத்துவிட்டார்; அதனுட் புகுந்த அந்த மீன் ஓரிர வுக்குள் கமண்டலத்துக்குள் நிரம்பி மறுநாள் காலேயில் 'ஓ தயாளுவே! நான் எப்படி உம்முடைய கலசத்துக்குள் கஷ்டப்பட்டு வஸிப்பது? என்மீது சிறிது அருள் புரியலாகாதா?' என்றது; உடனே அவர் அதைக் கமண்டலத்தினின்றும் எடுத்துத் தன்னிடத்திலுள்ள சந்தன ஜலத்தில் புகவிட்டார்; உடனே மூன்றடிப் பிரமாணம் வளர்ந்த அந்த மீன் 'என்னே இப்படி கஷ்டப்படுமாறு விட்டுவைப்பது உமக்குத் தருமமா?' என்றது; அன்புகூர்ந்த அவர் உடனே அதையெடுத்து ஓர் குளத்தினுள் விட்டார்; அங்கும் மிகவளர்ந்த அந்த மீன் 'நான் சுகமாக வஸிக்க இடம் பெருமல் வருந்துவது உமது திருவுள்ளத்திற்கு உகப்போ?' என்றது; உடனே அவர் அதை யெடுத்து ஏரியில் விட்டார்; அக்கணமே அந்த ஏரி நிரம்ப வளர்ந்த அந்த மீன் 'ஸ்வா மிந்! என்னேயிப்படி அலேயவிடுவது நியாயமா?' என்றது; அதைக்கேட்டுக் கருணே கூர்ந்த அவர் அதனேயெடுத்துக் கடலில் விட்டார்; அப்பால் அந்த ஸத்ய விரதர் அம்மீனிடத்துப் பெருமையல்கொண்டு அதனே நோக்கி 'ஓ மத்ஸ்யராஜனே! உன்னு டைய வரலாற்றைத் தெரிந்துகொள்ள மிக்க ஆவலுள்ளவனுயிருக்கிறேன்; நூறு யோஜனே நீளமும் அதற்குத் தக்க பருமனும் வாய்ந்துள்ள நீ யார்? உனது தத்து வத்தை வெளியிடவேணும்' என்று கைகூப்பி பிரார்த்திக்க, அந்த மத்ஸ்ய ராஜன் 'ஓ மஹாநுபாவரே! இன்று முதல் ஏழு நாட்களுக்குள் இந்த மூன்று உலகங்களும் மூழ்கிவிடப்போகின்றன; அந்தப் பெருநீரில் ஒரு விசாலமான ஓடம் வரப்போகிறது; அந்தப் படகில் ஸப்தரிஷிகளும் நீரும் எல்லா ஓஷதிகளும் ஸமஸ்த பிராணிகளும் ஏறி மனதிற்கு வருத்தமொன்றுமின்றி உலாவக்கடவீர்கள்; இப்படி ஸஞ்சரித்துக் கொண்டிருக்குமளவில் ஓர் பெருங்காற்று அடிக்கப் போகிறது; அதனுல் அந்த ஓட மானது பெருநீரில் அலேயப்போகின்றது; அப்பொழுது எனது சிரஸ்ஸில் முளேத் துள்ள பெரியதொரு கொம்பில் பெரியதொரு ஸர்ப்பத்தினுல் அந்த ஓடத்தைக் கட்டிவிடும்; பிறகு நான் அந்தப் படகுடன் உம்மையும் எல்லாப் பிராணிகளேயும் ரிஷிகளேயுஞ் சுமந்துகொண்டு அந்தப் பேரிருள் நீங்கும் வரையில் நான் கடலில் ஸஞ்சரிக்கப்போகிறேன்; அப்போது எனது பெருமையை நீர் உணர்வீர், என்று உரைத்துவிட்டு மறைந்திடவே, ஆச்சரியமடைந்த அந்த ஸத்யவிரதர் பகவானுலே குறிக்கபட்ட அக்காலத்தை எதிர்பார்த்திருக்கையில், ஸப்த மேகங்களினுடைய ஆரவாரத்தால் கடல் கிளரத் தொடங்கிற்று; பகவான் குறித்த தினத்தில் ஒரு பெரிய ஓடம் அந்தக் கடலில் வரக்கண்டு மகிழ்ந்து எல்லாக் கொடி செடி பீஜங்களே யும் அந்தப் படகிலேற்றித் தாமும் ஏறினர்; ஏறி ஸப்த ரிஷிகளுந் தாமுமாய்

பகவானைச் சிந்தனை செய்து கொண்டிருக்கையில், பெரிய கொம்புள்ள மத்ஸ்யரூபங் கொண்ட பகவான் காணப்பட்டார்; லக்ஷம் யோஜனை நீளமும் பதினாயிரம் யோஜனை பருமனும் ஒற்றைக்கொம்பும் ஸுவர்ண வர்ணமும் ஸகலலோக மனோஹர ரூபமும் வாய்ந்தவராகக் காணப்பட்டனர்; உடனே அந்த ஸத்யவிரதர் ஒரு பெரிய நாகத்தைக்கொண்டு அந்த மத்ஸ்ய பகவானது கொம்பிலே அப்படகைக் கட்டிவிட, அப்பெருமான் அதனை வஹித்துக் கொண்டு அண்டகடாஹத்தளவும் செல்லத் துள்ளி விளையாடி, முன்பு அசுரர் கவர்ந்து சென்ற வேதங்களையும் மீட்டுக் கொணர்ந்தருளி, ஆக இவ்வண்ணம் பிரளயாபத்தில் நின்றும் பிரஜைகளைக் காத்தருளியதும் வேதங்களை உபகரித் தருளினதும் மத்ஸ்யாவதார வரலாறும்.

இவ்வரலாறு பெரிய திருமொழியில் (6—6—2) "கொழுங்கயலாய் நெடு வெள்ளங் கொண்ட காலம் குலவரையின்மீதோடி அண்டத்தப்பால், எழுந்தினிது விளையாடுமீசனெந்தை" என்றும், (8–8–1) "வானோரளவும் முது முந்நீர் வளர்ந்த காலம் வலியுருவின் மீனாய் வந்து வியந்துய்யக்கொண்ட தண்டாமரைக் கண்ணன்" என்றுமுள்ள பாசுரங்களில் சிறிது விரிவாக அநுஸந்திக்கப்பட்டுள்ளது.

முன் ஒரு கல்பத்தின் அந்தத்தில் பிரமதேவன் துயிலுகையில் அவன் முகங்களினின்று வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலாவிக்கொண்டிருந்த நான்கு வேதங்களையும் மஹாபலசாலியாய் நெடுங்காலந் தவஞ்செய்து பெருவரங்கள் பெற்றவனான சோமகனென்னும் அசுரன் கவர்ந்துகொண்டு பிரளய வெள்ளத்தினுள் மறைந்துசெல்ல, அதனையுணர்ந்து திருமால் ஒரு பெருமீனாய்த் திருவவதரித்து அப்பெருங்கடலினுட்புக்கு அவ்வசுரனைத் தேடிப்பிடித்துக்கொன்று அவன் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டுக்கொணர்ந்து அவற்றைப் பிரமனுக்குக் கொடுத்தருளினன் என்ற வரலாறும் உண்டு. இவ்வசுரன் பெயர் சோமகனென்றலும் ஹயக்ரீவனென்றலும் உண்டு. ... ... ... ... (1)

## 2. ஹம்ஸாவதார வரலாறு

முன்னொரு காலத்தில் மதுகைடபரென்ற அசுரர்கள் பிரமதேவனிடத்திலிருந்து வேதங்களை அபஹரித்துக்கொண்டு கடலில் மூழ்கி மறைந்துவிட ஞானவொளியைத்தரும் பெருவிளக்கான வேதங்கள் ஒழிந்தமைபற்றி உலகமெங்கும் பேரிருள் மூடி நலியாநிற்க, பிரமன் முதலியோரனைவரும் கண் கெட்டவர்போல யாதொன்றும் செய்யவறியாமல் திகைத்து வருந்துவது கண்டு திருவுள்ளமிரங்கித் திருமால் கடலினுட்புக்கு அவ்வசுரர்களைத் தேடிக் கண்டுபிடித்துக் கொன்று வேதங்களை மீட்டுக்கொணர்ந்து ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு உபதேசித்தருளினன். இவ்வரலாற்றைச் சிறிது வேறுபடக் கூறுதலுமுண்டு. ... ... (2)

## 3. கூர்மாவதார வரலாறு

முன்னொரு காலத்தில், இவ்வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துக்குச் சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒரு பூமாலை ப்ரஸாதிக்கப்பெற்ற ஒரு வித்யாதரமகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கை வீணையில் தரித்துக்கொண்டு பிரமலோகவழியாய் மீண்டுவருகையில் தூர்வாஸமஹாமுநி

எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க, அவ் விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன் பெருமையையுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆனந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து, அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவத யானையின்மேற் பவனிவந்துகொண்டிருந்த இந்திரனைக் கண்டு அவனுக்கு அம்மாலையைக் . கை நீட்டிக் கொடுக்க, அவன் அதனை மாவட்டியினுல் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல் வைத்த வளவில் அம்மதயானை அதனைத் துதிக்கையாற் பிடித்திழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது; அதுகண்டு முனிவன் கடுங்கோபங் கொண்டு இந்திரனை நோக்கி "இவ்வாறு செல்வச் செருக்குற்ற உன்னுடைய ஐச்வரியங்களெல்லாம் கடலில் ஒளிந்துவிடக் கடவன" என்று சபிக்க, உடனே தேவர்களின் செல்வம் யாவும் ஒழிந்தன. ஒழியவே அசுரர் வந்து பொருது அமரரை வென்றனர். பிறகு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையும் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாக நாட்டி வாஸுகியென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர். அப்பொழுது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்களின் வேண்டுகோளினுல் திருமால் பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம்மலையின் கீழே சென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனன். இப்படி ஸ்ரீமந் நாராயணன் அக்கடலினிடையே மஹாகூர்மமாய் மந்தரபர்வதத்திற்கு ஆதாரமாய் எழுந்தருளியிருக்க, வாஸுகியின் வாலைப் பிடித்துக்கொண்ட தேவர்களும் தலையைப் பிடித்துக்கொண்ட அசுரர்களும் ஆகிய இரு திறத்தாரும் அதனை வலியப் பிடித்து இழுத்துக் கடைய வலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கி அந்திருமால் தான் ஒரு திருமேனியைத் தரித்துத் தேவர்கள்பக்கத்திலேயும், வேறொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும் நின்று வாஸுகியின் வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக் கடைந்தனன். அப்பால் அந்த ஸ்ரீ மஹாவிஷ்ணு தந்வந்தரி யென்னும் தேவரூபத்தைத் தரித்து அம்ருதபூர்ணமான கமண்டலத்தைக் கையிலெடுத்துக் கொண்டு அந்த க்ஷீரஸமுத்ரத்திலிருந்து தோன்றினன். அப்பொழுது அசுரர்கள் தந்வந்தரியின் கையிலிருந்த அம்ருதகலசத்தை பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்ள, அந்த எம்பெருமான் ஜகந்மோகனமான ஒரு பெண்வடிவத்தைத் தரித்து அசுரர்களை மயக்கி வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்களுடைய கோஷ்டிக்கு மாத்திரம் ப்ரஸாதித்தனன். ... (3)

### 4. வராஹாவதார வரலாறு

ஹிரண்யகசிபுவின் உடன் பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னுங்கொடிய அசுரன் தன் வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினுல் திருமால் மஹாவராஹரூபியாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக் கண்டு பொருது கோட்டினுற் குத்திக்கொன்று பாதாளலோகத்தைச் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினுற் குத்தி அங்கு நின்று எடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினன் என்பதாம். இப்பொழுது நடக்கிற ச்வேத வராஹ

கல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந் நாராயணன் ஏகார்ணவமான பிரளய ஜலத்தில் முழுகியிருந்த பூமியை மேலே யெடுக்க நினைத்து மஹாவராஹரூபியாகிக் கோட்டு நுனியாற் பூமியை எடுத்து வந்தனனென்ற வரலாறும் உண்டு. ... ... ... ... (4)

## 5. நரஸிம்ஹாவதார வரலாறு

ஹிரண்யகசிபு என்பவன் தேவர் மனிதர் முதலிய எவ்வுயிர்களாலும் பகலிலும் இரவிலும் வானத்திலும் பூமியிலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணமுண்டாகாதபடி வரம்பெற்றான். இவன் தேவர் முதலிய யாவருக்கும் பலபல கொடுமைகளைப் புரிந்து அனைவரும் தன்னையே கடவுளாக வணங்கும்படி செய்து வருகையில், அவன்மகனான ப்ரஹ்லாதாழ்வான் இளமை தொடங்கி மஹாவிஷ்ணுபக்தனாய்த் தந்தையின் கட்டளைப்படி முதலில் அவன் பெயரைச் சொல்லிக் கல்விகற்காமல் நாராயணநாமம் சொல்லிவரவே கடுங்கோபங்கொண்ட இரணியன் ப்ரஹ்லாதனைத் தன் வழிப்படுத்துவதற்குப் பலவாறு முயன்றபின் அங்ஙனம் வழிப்படாத அவனைக்கொல்வதற்கு என்னவுபாயஞ்செய்தும் அவன் பகவானுடைய அநுக்ரஹபலத்தினால் ஒரு கேடுமின்றியிருக்க ஒரு நாள் ஸாயங்காலத்திலே அந்த ஹிரண்யன் தன் புத்திரனை நோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்கேயுளன்? காட்டு' என்ன, 'தூணிலுமுளன் துரும்பிலுமுளன் எங்குமுளன்' என்று உறுதியாய்ச் சொல்ல, உடனே இரணியன் "இங்கு உளனோ?" என்று சொல்லி எதிரில் நின்ற தூணைப்புடைக்க உடனே அதிலிருந்து திருமால் மநுஷ்ய ரூபமும் சிங்கவடிவுங் கலந்த நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிடித்து வாசற்படியில் தன் மடிமீது வைத்துக்கொண்டு தன் திருக்கையில் நகங்களால் அவன் மார்பைப் பிளந்து அழித்திட்டு ப்ரஹ்லாதனுக்கு அருள் செய்தானென்பது பிரஸித்தம். "அளந்திட்ட தூணை அவன் தட்ட ஆங்கே, வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய், உளந்தொட்டிரணிய னொண்மார்வகலம் பிளந்திட்டகைகள்" என்றும், "எங்குமுளன் கண்ணனென்ற மகனைக்காய்ந்து, இங்கில்லையாலென் றிரணியன் தூண்புடைப்ப, அங்கப்பொழுதே அவன் வீயத் தோன்றிய, என் சிங்கப்பிரான் பெருமை ஆராயுஞ் சீர்மைத்தே" என்றும் ஆழ்வார்கள் ஈடுபடுவர்கள்.

### (நரஸிம்ஹாவதார விசேஷங்கள்)

வேறேயொரு தூணிலிருந்து நரசிங்கமூர்த்தி தோன்றினால் முன்னமே ஒரு நரசிங்கத்தை உள்ளே வைத்து நாட்டிய தூண் அது என்று சொல்லிவிடக்கூடுமாகையாலே அந்த வார்த்தைக்கு இடமில்லாதபடி அந்த இரணியன் தானேதனது உயரம் பருமனுக்குப் பொருந்தப்பார்த்து அளந்து நாட்டிய அவன்வாசல் தூணிலிருந்தே திருமால் நரசிங்கமாய்த் தோன்றினனென்பதும், வேறுயாரேனும் கையால் தட்ட அத்தட்டியவிடத்திலிருந்து தோன்றினால், 'அவர்தம் கையில் நரசிங்கத்தை அடக்கிக்கொண்டுவந்து தூணிலே பாய்ச்சினார்' என்று சொல்லிவிடக்கூடுமாகையாலே அவ்வார்த்தைக்கு அவகாசமில்லாதபடி அவ்விரணியன் தானே தன்கையால் தட்டினவளவில் திருமால் தோன்றினனென்பதும்'—அவன் ஓரிடத்தில் தட்ட மற்றோரிடத்திலிருந்து நரசிங்கம் தோன்றினால் 'எங்குமுளன்' என்று ப்ரஹ்லாதன் செய்த

2

பிரதிஜ்ஞை தவறி' நீ சொல்லுகிறவன் இங்கில்லை' என்று இரணியன் செய்த பிரதிஜ்ஞை நிலைநிற்குமாகையாலே அதற்கு இடமில்லாதபடி அவன் தட்டின இடத்திலிருந்தே திருமால் தோன்றினனென்பதும்,—அவன் தட்டின பிறகு சிறிதுபோது கழித்து நரசிங்கம் தோன்றினுல் 'நான் தட்டினபொழுது திருமால் அங்கில்லை' என்று அவன் சொல்லி திருமால் எங்கும் எப்பொழுதும் எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித்திருக்கிற உண்மை நிலையை மறுக்கக்கூடுமாகையாலே அதற்கு இடமறும்படி கர்ப்பம் கருமுதிர்தல் ப்ரஸவித்தல் முதலியனவும் குழந்தையாய் ஜனித்தல் பிறகு நாளடைவில் வளர்தல் என்பனவுமில்லாமல் அவ்வெதிரியினும் பருத்து வளர்ந்த வடிவையுடையவனுய் அப்பொழுதே தோன்றினனென்பதும்,—அங்ஙன் தோன்றியவிடத்தும் ஹிரண்யன் ஜயசீலனுகவும் நரஸிம்மன் பராஜிதனுகவும் நேர்ந்தால் 'எங்குமுளன்' என்ற உண்மை நிலைத்தாலும் பரத்வம் ஸித்தியாமற்போய்விடுதல் பற்றி அதைவிடத் தோன்றுமலிருப்பதே நலமென்னும்படியிருக்குமாதலால் அங்ஙனமாகாதபடி அக்கொடியவனைத் தவறாது அழித்தனனென்பதும்,—தேவர் மனிதர் விலங்குகள் தாவரம் என்னும் நால்வகைப் பிறப்புக்களிலுள்ளவற்றில் ஒவ்வொன்றினுலும் தனித்தனி சாகாதபடியும், ப்ரஹ்ம ஸ்ருஷ்டிக்கு உட்பட்ட எந்த பிராணியினுலும் சாகாதபடியும், ப்ரஹ்மருத்ராதிகளிடத்திற் பெற்றவரம் பழுதுபடாமைக்காக நரங்கலந்த சிங்கமாய் ப்ரஹ்மஸ்ருஷ்டியினுட்படாமல் தன்னைத்தானே தோற்றுவித்துக்கொண்டு தோன்றினனென்பதும்,-அஸ்த்ரசஸ்த்ரங்களொன்றினுலும் சாகாதபடியும் ஈரமுள்ளதனுலும் ஈரமில்லாததனுலும் இறவாதபடியும் பெற்ற வரம் வீண்போகாமே நகங்களினுல் கீண்டுகொன்றனனென்பதும், பகலிலு மிரவிலுஞ் சாகாதபடி பெற்றவரம் பொய்படாதபடி அப்பகலிரவுகளின் ஸந்தியாகிய மாலைப்பொழுதிலே கொன்றனனென்பதும், பூமியிலும் வானத்திலும் சாகாதபடி பெற்றவரம் மெய்யாம்படி தன் மடிமீது வைத்துக் கொன்றுனென்பதும்,—வீட்டின் அகத்திலும் புறத்திலும் இறவாதிருக்கும்படி பெற்ற வரத்திற்கு விரோதமின்றி வாசற்படிமீது வைத்துக்கொண்டு கொன்றனனென்பதும் இவைபோல்வன பல விசேஷங்கள் இவ்வவதாரத்திலே அருமையாக நோக்கத்தக்க விஷயங்களாம். "சுரரசுரர் முனிவர் நரர்கையில் பாரில் சுடர் வானில் பகலிரவில் உள்புறம்பில், பெருபடையில் தான் சாகா விரண்யன்றன்னைப் பிரகலாதன் தர்க்கித்துண்டென்ற தூணில், நரஹரியாய்ப் பொழுதுபுகு நேரந்தனில் நாடியுதித்துயர் வாசற்படிமீதேறி, இரணியனைத் தொடைமிசைவைத்துகிரினுலே இருபிளவாக்கினையரியே எம்பிரானே" என்றுர் பின்னேரும். ... (5)

## 6, 7. வாமந, த்ரிவிக்ரமாவதார வரலாறு

ப்ரஹ்லாதன் தனக்கு வயது சென்றபிறகு தன்னுடைய பகவத்தியானத்திற்கு இடையூருயிருக்கிற ராஜ்யபரிபாலனத்தைத் தனது பௌத்திரனுகிய பலியினிடத்தில் ஒப்புவித்துத் தான் தவஞ்செய்யப் போவதாகக் கருதி அந்த மாவலியை ஒருநாள் ஏகாந்தத்தில் அழைத்து 'நான் வெகுகாலம் அரசாண்டு வந்தேன்; என் காலத்தில் ஒருவரும் அதர்மம் செய்யாதபடி நோக்கி வந்தேன்; ஸ்ரீ விஷ்ணுவே முழுமுதற் கடவுள் என்கிற ஸித்தாந்தத்தை நான் உலகிற் பரவச் செய்து அனைவர்களையும் விஷ்ணுபக்தர்களாக்கி வந்தேன். இப்போது நான் கிழவனுய் விட்டபடியால் விதிப்

படி தவஞ்செய்யப் போகின்றேன்; விஷ்ணுத்வேஷியாய் மாண்டுபோன உன் தந்தையை [விரோசனனை]ப் போலல்லாமல் நீ பரமவிஷ்ணு பக்தனாயிருந்து ராஜ்ய மாளக்கடவை' என்று நன்மதிகூறிப் பட்டங் கட்டித் தான் இமயமலையேறித் தவஞ் செய்யச்சென்றான்.

பிறகு மாவலி அப்படியே சிலநாள் அரசாண்டுவந்து ஒருநாள் மந்திரிகளை அழைத்து 'நான் சில நன்மைகளை யடையத் தவஞ்செய்யச் செல்ல விரும்புகிறேன்; நான் மீண்டும் வருமளவும் இந்த ராஜ்ஜியத்தில் விஷ்ணுபக்தி வழுவாதபடி நோக்கி வாருங்கள்' என்று கட்டளையிட்டுத் தான் இமயமலையருகில்போய் நான்முகக் கடவுளை நோக்கித் தவஞ் செய்துகொண்டிருக்கையில், பிரமன் பிரஸந்நனாய் வந்து காட்சி தந்து 'வரம் வேண்டிக்கொள்' என்ன, 'ஸ்வாமிந்! எனக்கு என் பாட்டனாருப தேசித்த விஷ்ணு பக்தியும் தரும சிந்தையும் எப்போதும் வழுவாதிருக்க வேணும்' என்றும் 'மூவுலகத்தையும் நான் வென்று வாழவேணும்' என்றும் இவை முதலான சில வரங்களை வேண்டிப் பெற்றுக்கொண்ட மாவலி தனது ராஜதானியாகிய சோணிதபுரத்திற்கு வந்து சுக்கிராசாரியர் முதலிய ஆப்தர்களிடம் தான் பெற்ற வரங்களைச் சொல்லி அவர்களுடன்கூட மகிழ்ச்சியடைந்து ராஜ்யத்தைச் செங்கோல் செலுத்திக்கொண்டுவந்து பல பல யாகங்களையும் மற்றும் பலவிதமான தான தருமங்களையும் செய்துகொண்டு சுக்கிராசாரியரையும் ப்ரஸந்நராக்கி, தான் ஸகல லோகங்களையும் வெல்லத்தக்க வீறுடையனாம்படி அவரிடத்திலும் ஆசீர்வாதம் பெற்று அதனால் செருக்குற்று ஒருவரையும் மதியாமல் திரிந்து கொண்டிருந்தான்.

சிலநாள் கழிந்தபின் ஸ்வர்க்கலோகத்தையும் வென்று ஆளவேண்டுமெனக் கருதி சுக்கிராசாரியரை யழைத்து 'நீர் ப்ருஹஸ்பதியிடஞ்சென்று நான் சொன்னதாகச் சொல்லும்; அதாவது—ஓ ப்ருஹஸ்பதீ! உமக்கு இந்திரனைப்போல் நானுமொருசிஷ்யனே; எங்கள் குலத்தில் ஹிரண்யகசிபு ஆண்டுவந்த ஸ்வர்க்கலோகத்தைப் பின்பு ஒருவரும் ஆளத்தக்க பலசாலிகளாகப் பிறவாமையால் இந்திரன் பிடித்துக்கொண்டான்; இப்போது அதனை ஆளுகைக்கு எனக்கு வல்லமையுண்டு; ஆகையால் இப்போது அதை எனக்கு விட்டுவிட வேண்டியது; இல்லையாகில் போர் செய்யவேண்டியது; இதற்கு இந்திரன் என்ன சொல்லுகிறானோ அதை உணர்ந்து சொல்லும்'—என்று சொல்லியனுப்பினான். சுக்கிரனால் இதுகேட்ட ப்ருஹஸ்பதியும் இந்திரனோடு ஆலோசித்து ஒரு மாதத்திற்குள் விடையளிப்பதாகச் சொல்லி சுக்கிரனை அனுப்பிவிட்டார். பிறகு இந்திரன் ஒன்றுந்தோன்றாமல் ப்ருஹஸ்பதியையுங் கூட்டிக்கொண்டு பிரமனிடஞ் சென்று செய்தியைச் சொல்ல, அதுகேட்ட நான்முகன் 'வரங்கொடுப்பதற்கு மாத்திரமே எனக்கு அதிகாரமுளது; கொடுத்த வரத்தினால் கெடுதி நேரிடுங்காலத்தில் வேறொரு உபாயத்தினால் அதை மாற்ற எனக்கு வல்லமை இல்லை' என்ன, பிறகு சிவனிடஞ் சென்று முறையிட, அச்சிவபிரானும் 'பிரமன் தந்த வரத்தை நான் அழிக்க வல்லேனல்லேன்; விஷ்ணுவிடஞ் சென்று முறையிடுதல் நன்று' என்று சொல்லிவிட, அவர்கள் விஷ்ணு பக்கலில் வந்து சொல்லிக்கொள்ள, அதற்கு விஷ்ணு 'ஓ ப்ருஹஸ்பதே! மாவலி எனக்குச் சிறந்த பக்தன், மிக்க தருமசிந்தை யுள்ளவன், திடீரென்று அவனை நான் ஒன்றுஞ் செய்ய

